






இலாஹி.

சிவராமபேட்டை,

'வாவாபகருதீன் பள்ளிவாசலின் பேரில்

# மருத்துவ அலங்கார
## கீர்த்தனைகள்.

முதற்பாகம்.





தென்காசித்தாலுகா கொடிக்குறிச்சி கிராமம் சாகம்
சிவராமபேட்டை

தாசன், B. S. அய்யாக்குட்டி ஆச்சாரி அவர்களும்
ஷையூர்
சண்முகவேல் புலவரவர்களும்
இயற்றியதை
...யாக்குட்டி ஆச்சாரி அவர்களால்
...ஸ்ரீராமாநுஜம் பிரஸில்
...பிக்கப்பெற்றது

1933 [விலை அணா 2.





இலாஹி.

சிவராமபேட்டை,

வாவாபகருதீன் பள்ளிவாசலின் பேரில்

# மகுத்துவ அலங்கார
## கீர்த்தனைகள்.

முதற்பாகம்.



தென்காசித்தாலுகா கொடிக்குறிச்சி கிராமம் சரகம்

சிவராமபேட்டை

தாசன், B. S. அய்யாக்குட்டி ஆச்சாரி அவர்களும்

ஷையூர்

சண்முகவேல் புலவரவர்களும்

இயற்றியதை

ஷை B. S. அய்யாக்குட்டி ஆச்சாரி அவர்களால்

தென்காசி, ஸ்ரீராமாநுஜம் பிரஸில்

பதிப்பிக்கப்பெற்றது

 1933. [விலை அணா 2.

## முகவுரை.

ஒழுக்கத்து நீத்தார் பெருமை விழுப்பத்து
வேண்டும் பனுவற் றுணிவு.



அன்பே யுருவான அறிவுடையீர்!

சிறப்புற்றோங்கிய சிவராமபேட்டை எனும் பதியின் கண்ணே வாவா பகர்தீன் பள்ளிவாசலில் எழுந்தருளியிருக்கும் சற்குருவெனப் பெயர்பெற்ற அவுலியார் ஒலிமகானின் புகழைப்பாடி படிப்போர் கேட்போர் பலரும் வியப்புற்று ஆனந்தப்பேற்றை யடையும்பொருட்டு சிலபாசுரங்களால் சிறு நூலொன்று ஏற்படுத்த வேண்டுமென அவாவுற்று தாசன் B.S. அய்யாக்குட்டி ஆச்சாரியவர்களிடமும், S சண்முகப்புலவரவர்களிடமும் அறிவிக்க மேற்படியார்களும் அதற்கிசைந்து "மருத்துவஅலங்காரம்" என்னும் பெயருடன் தற்கால நாகரீகத்திற்கேற்ப சிற் சில வர்ண மெட்டுகளுடன் இச்சிறுநூலை இயற்றியளித்ததற்காக எங்களது நன்றியை செலுத்துவதுடன் அன்பர்கள் யாவரும் இந்நூலை ஆதரித்து மேற்படி ஆசிரியர்களை நல்லாசிகூற வேண்டுமென எல்லாம்வல்ல இறைவன் திருவருளை யேற்றிப்புகழ்வோமாக.

V. M. Periyamadappa
Thevar,
Kodikurichi
Tenkasi Taluk.

T. Subramania Pillai
Sivaramapettai,
Tenkasi Taluk.





செங்கோட்டைத்தாலூகா ஆய்க்குடி மணியம்
வாலமார்த்தாண்டபுரம்,

**தாசன் தவசி ஆச்சாரியவர்களால்,**

## இயற்றிய ஆசிரிய விருத்தம்.



எண்ணரிய மையதிறைண்டவர்கள்
பாதமிரவுபக லெப்பொழுதும் மேந்தி நன்றாய்
விண்ணரிய அஷ்டாங்க யோகஞ்செய்து
வேண்டியதோர் நிலைமைபெற்று ஞானியாகி
நண்ணரிய பள்ளிதனில் அடக்கமான—நாள்
வருட முன்னூத்தி அறுபதின்மேல்
பண்ணரிய ட கனுச்சி காக்ஷிதந்த—பக்கு
வத்தின் பெருமைதனைப் பகிருேன்றேத்

## ஷை விருத்தம்.

சீராரும் புகழ்நாடு தென்னிந்தியாவின்
சிறந்த சிவராமபேட்டை கன்னியாம் நன்
காராருஞ் சிதமதி கவிக்கும்பாநின்
களகமணி மகமதியர் வசித்தல்கொண்ட
பேராரும் பள்ளியீசானியத்தன்னில்
பக்குவமாய் கவறடக்கும் மாதவத்தோன்
ஆராரும் அதாசெயிக்க பாலனுக்கு
அருள்காட்டி காக்ஷிகொடுத்தருளினரே.



## ஷ விருத்தம்.

கதிரவின் திங்கள்தனி லுதித்துவந்த
கருணை நபிநாயகமென் போதமூர்த்தி
அதிகவிர்த்தி வொளிசிறக்க அகிலத்தோரை
அனுதினமும் திருத்திட நாயகத்தை நெஞ்சின்
பதித்திடநல் லைய்ந்துவேளை தொழுகைசெய்ய
பணித்துமெகு நாயகத்தின் பதத்தையுள்ளிச்
சதிருடன் வாழ்ந்திலங்கியதோர் தன்மையோங்கச்
சாதித்தான் ஓர்விரதம் போதித்தானே.

## ஷ விருத்தம்.

அண்டமதின் சகஸ்திர நூற்றெட்டுக்கோடி.
யாக்குவதினைண்டவர்கள் அரூபியாவோன்
கொண்டதொனி ரூபமொடு காக்ஷி நல்ல
குருவான நபிகளை நோக்குங்காலை
தண்டமிழ்மா முதிர் நாலாம் வேதத்துய்த்து
தரித்திலகு சதிர்வாறத்திறவு திங்கள்
பண்டமர் நாயகமான நபிகள்தோன்றி
பாற்புறக்க கிருபையருள் புரிந்தானன்றே.







இலாஹி.

வெண்பா.

சீர்பெருகும் சிவராமபேட்டை மாநகரில்
பேர்பெருகும் வாவா பள்ளிவாசலின்மேல்—வையகத்தில்
பக்திரசக் கீர்த்தனையாய்ப் பாடிட என்னுவுதன்னிட
பட்சமுடன் வருநுவீரே.

## சன்னதி விசேட நகரச் சிறப்பு.

காகுதிகன் காகுதியே என்ற வர்ணமெட்டு.

### பல்லவி

பார்த்தால் விமோசனம் வாவாபள்ளி வாசலின்
தெரிசனம் (பா)

### அநு பல்லவி

கார்ப்பாற் கன்மவினையை தீர்ப்பார் தினமும்சென்று (பா)

### மகுடம்

பலவினை யனுகிடா தருள்பெற அனுதினம் (பா)

வந்தவர் பிணியை பந்தமாகவே
வாவா பகர்தீன் பள்ளிவாசலைப் (பா)

### சரணம்

ஜென்மவினை யகற்றிடும் செல்வமதை பொங்கிடும்
சீர்பெருகும் சிவராம பேட்டைதனில் வழங்கிடும்
வாரவர் வினையகற்றும் வாவாபள்ளி வாசலும்
வாரவாரம் விசேஷங்க ளாரபாரமாகுமாம்
வாரவாரம் வியாழன்வெள்ளி விசேஷம்—பள்ளிவாசல்
பாங்குடன் அமைந்த விசேஷம்— உள்ளே
தோணுதே அவுலியார் தெரிசனம்— அதி
தங்கிநின்று தொழுபாற்
ஜொலிக்குதங்கே பாராய்
சொர்ணமணிபோல் நேராய்
ஒளிக்கும் மதம் சீராய்
உத்தமர் மனம் சேராய் சென்று (பா)

## சரணத் தொடர்ச்சி.

வாரவாரம் வியாழன் வெள்ளி வாத்தியம் தினமுழங்கும்
வாரவர்கள் நேர்த்திக்கடன் வருதியாகத்தான் விளங்கும்
கீர்த்திப்ர வாவாபள்ளி ஜோதிசதா இலங்கும்
கீர்த்திப்ரசாதம் பெற்றோர் முகத்தில் துதிதுலங்கும்

தோரணக் கொடியின்மேலே சிறக்கும்—கிறு மூறு
திறு சுறு புண்ணியம் சுறக்கும்— அவுலியார்
ஆரணக்கிரிகை யென்றும் நிறக்கும்— அதில்
அதிசயத்தைக் காணவாம் தொறக்கும்

ஆனந்தக் கொண்டாட்டம்
அன்பர்களினை தேஷ்டம்
முஸ்லீம்கள் கூட்டம்
முக்கியமாய் நாட்டம் கொண்டு (பா)

தூண்டாமல் விளக்கெரியும் தொழுகைப் பள்ளிவாசலாம்
கூன் குருடு பாவந்தீர்க்கும் கொத்துவாப்பள்ளி வாசலாம்
பத்திபழம் சற்கரைகள் பாத்தியா ஓதுவார்கோடி
பாவவினைகளைத் தீர்க்க தேடிவருவார்கள் நாடி

தோணுதே கடைகள் விஸ்தாரம்—தொழில்
தோதுவாய் நடக்குதே வியாபாரம்—எங்கே
பார்த்தாலும் ஜனங்களோட கூட்டம்—அதில்
யாபேரும் மதிக்கத்தக்க நாட்டம்

அய்யாக்குட்டியின் பாட்டு
அமுர்தமாக ஊட்டு
சண்முகவேல் பாட்டு
நயவுசெய்து கேட்டு (பார்)

## குமாரதெய்வம் இதோ பேரியது என்ற வர்ண மெட்டு.

இராகம் கமாசு தாளம் ரூபகம்.

### பல்லவி

வாவா பள்ளிவாசல் இதோ தெரியுதுபார்
வாராய் சீராய் நேராய் தொழுதிடுவோம் (வாவா)

### அநு பல்லவி

ஊழ்வினைகளெல்லாம் ஒழிந்திடத் தேடி
ஓடியே நாமள் தேடிப் பார்த்திடுவோம் (வா)

### சரணம்

பண்புடனே கூடி நாம் தேடி
பள்ளிவாசலையே பார்த்திடுவோம் கூடி கூட்டம் கூடி
வரம் தந்திடும் அவுலியாவை
பரமருள்புரி ஒலி மகானை
பார்ப்போம் பள்ளிவாசலை—கேழ்ப்போம் சுயவரங்களை (வா)
கொத்துவாப் பள்ளியின் மகிமை
கொடிக்குறிச்சியாம் சிவராம பேட்டை தனில்பேட்டை
தோரணக்கொடி—விசேஷம்
தொழுதிடுவோம்—அசேஷம்
அன்பனும் அய்யாக்குட்டி அமுர்தச் சுயகவி பாடிட (வா)

---

### காந்தி சன்யாசி என்றவர்ண மேட்டு.

### பல்லவி

வாவா பள்ளியே—வர
மருள்வாய் எங்களை—பகர்நின் (வாவா)

### அநுபல்லவி

முத்தாய் செனிப்பவரே
மூவுலகம் தொழுபவரே
சித்தாய் தொனிப்பவரே
சிறப்பா—யுற்பவ—கற்பக—விற்பன (வா)

கன்மவினை தீர்ப்பவரே
கடைக்கண்ணால் பார்ப்பவரே
நன்மைதனைச் சேர்ப்பவரே
நற்றவர்—முற்றிடும்—கற்றவர்—சொற்றிடும் (வா)

முஸ்லீம்கள் தொழுபவரே
மோச்சகங்களானவரே
அய்க்துவேலை தொழுபவரே
அன்பன்—சண்முக—வேல்சயம்—பாடும் (வா)



சரிசரி சாமுத்திரிகா லெக்ஷணம் என்ற வர்ணமெட்டு.

## பல்லவி

தொழுகுவோம்—தொழுகுவோம்
தொழுகைப்பள்ளி—வாசலைத்தேடி (தொ)

## அநு பல்லவி

பார்ப்போம்—வரம்—கேட்போம்பிணி
தீர்ப்போம்—பள்ளி—வாசலைத்தேடி (தொ)

## சரணம்

வாரவாரம் வந்த வர்க்குவரும் வினைகள் தீருமாம்
வையகத்தில் புதுமையாக வளங்கிடும் வாவா மகிமையாம்
வாவா பள்ளியாம்—வருவார்
வியாழன் வெள்ளியாம்
வருவார்கோடி—தொழுவார்தேடி
வாவா பள்ளி—வாசலில் நாம் (தொ)

தீருதபிணிகளெல்லாம் தீர்க்கும் பள்ளிவாசலாம்
தேசந்தோறும் ஜனங்களெல்லாம் தேடியே வருவார்களாம்
தீர்த்துவைப்பாராம்—பிணியை
நீக்கிவைப்பாராம்
அறிவாயருள்—புரிவாய் ஜெய
அப்துல்காதரே ரூடு சாமன் (தொ)

பண்படனே மேளவாத்தியம் பாங்குடன் முழங்குமாம்
பள்ளிவாசலின் மகிமை பக்தியாய் விளங்குமாம்
பவிசு தங்குமே—செய்யும்
பவமு நீங்குமே—தினம்
பரமே—அய்யாக்குட்டி—தமிழ்
நயமே—இருநய—மேவியே (தொ)

# கதர்கப்பல் கோடி தோணுதே என்ற வர்ண மெட்டு.

## பல்லவி

கண்டால்கலிதீருமே

## அநு பல்லவி

17/3/1

அவுலியாவே ஒலி—அநுதினம் தெரிசித்தால் (கண்)

## சரணம்

மானிடர்வாழ்வின் மருந்தவஞானம் பிரகாச
மாரணம் இல்லாமலே ஆதரிக்கவருவீர்
ஜோதி பள்ளிவாசலில் தோன்றியஒலிமான்
சோதித்திடாமலிப்போ தோன்றியவீரனுக்கு
சோதியாமல்—பரி சோதியாமல்—தாமதியாமல்
ஆர்யில்தொழுதிவங்கேநாம்—அவுலியாஒலிமகானே (க)

ஓடியே தொழுகுவார் உலகத்தார் கோடி
உச்சவம் வியாழன் வெள்ளி தவறாமல்தேடி
பாபவினைகளெல்லாம் பறந்திட ஓடி
பாத்தியா ஓதிடுவோம் பள்ளிவாசலைத்தேடி
பழம் சர்க்கரை—பத்திபழம் சர்க்கரை—புஷ்பம்பழம்சர்க்கரை
கொண்டுபாத்தியா ஓதிடுவோம் (க)

கிலராமபேட்டைகாதி
செல்வம் பிறந்தேதேடு
சிறுவன் அப்துல் காதரோடு
சேர்ந்துமே உறவாடு
சீருட்டுவீர்—உண்மை பாருட்டுவீர்—தமிழ் அருள் ஊட்டுவீர்
தாசன் சண்முகன் பாட்டை (கண்)

---

## கந்தா காருண்யனே என்ற வர்ணமெட்டு.

இராகம்—இந்துஸ்தான் தாளம்—ஆதி

### பல்லவி

வாவா பகர்நின்பள்ளி—வாசலின் மகிமை
தொழுவோம் ஒன்றுகூடி—தோத்திரம் செய்குவோம் (வா)

### அநு பல்லவி

அல்லாஹு அல்லாஹு வென்று—அவரடியை நாம்தொழு
[வோம்

### பாட்டு

மக்கம் பள்ளிவாசல்—மகுமோது நபியே (வா)

### ஷ அநு பல்லவி

வாரவாரம் வியாழன் வெள்ளி
வாரவர் அநேகம் கோடி
ஆர பார மாக நாமள்
அவுலியாவை கண்ணால் காண்போம்

### பாட்டு

வந்தால் கலிகள்தீரும்—வாவா பள்ளிமகிமை (வா)

தொகையறு.

நாம்கண்டோம் கண்டோம்—கலியுகத்தில் கண் கண்டஒளி
ஆதிலோகம்தொழுதவந்த அவுலியா ஒளிமகானே[மகானே

பாட்டு

துன்பம் தீர்த்திடுவார்—தொழுவோம் வாருங்கள்
தாசன் சண்முகவேல்—தமிழ் போற்றினனே (வா)

---

பண்டாரம்போல் வரும் முருகனை என்ற வர்ண மெட்டு.

பல்லவி

வாவா பள்ளி வாசலின்மகிமையை பார்க்க வாருங்கோ

அநு பல்லவி

பார்க்கவாருங்கோ—பிணிகளை
தீர்க்கவாருங்கோ (வா)

மகுடம்

பக்தருடன்—இதுதகி
கண்டோம்—ஒளிமகானை (வா)

பலவினை யணுகிடா—உனைதனை வேண்டினேன்
பாதம் பணிக்கிறோம்—ஒளிமகானே (வா)

சரணம்

குறையிலா வரமது—கூறித்தொழுதிட
குழந்தை சண்முகவேல் சுபகவி பாடிட (வா)

முற்றிற்று.

# விளம்பரம்.

இப்புஸ்தகம் மொத்தமாகவும், சில்லறையாகவும், வியாபாரிகளுக்கு விலை சகாயமாகவும், கீழ்கண்ட விலாஸதாரிடம்நேரிலும் வி. பி. மூலமாகவும் பெற்றுக் கொள்ளலாம்

விலாஸம்:—

B. S. அய்யாக்குட்டி ஆச்சாரி,

[illegible]

இசக்கி ஆச்சாரி,

தென்காசித்தாலுகா,

[illegible]டகால் P. O.

சிவராமப்பேட்டை

